


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Saturday, the 9th December 1961.**

The House met in the Assembly Chamber, **Fort St. George,** at half past eight of the clock, the Deputy Speaker, (SRI B. BHAKTAVATSALU NAIDU) in the Chair.

QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS

*Prime Minister's tour (expenditure)*

* 2203 *Q.*—SRI K. ANBAZHAGAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இந்தியாவின் தலைமை அமைச்சர் அவர்கள் 1961 அக்டோபரில் நடத்திய தமிழ்நாடு சுற்றுப் பயணத்திற்காக அரசாங்கம் செலவிட்ட தொகை எவ்வளவு ?

(இ) அவ்வமயம் சுற்றுப் பயணத்தில் கலந்துகொண்ட தமிழ் நாடு அமைச்சர்கள் பெறும் படிச்செலவு எவ்வளவு ?

(உ) தலைமை அமைச்சர் நேருவின் சுற்றுப்பயண நாட்களில் கடமையாற்றிய காவல் துறையினரின் படிச்செலவுக்கு ஆகும் தொகை எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) to (*e*).—Orders sanctioning the expenditure were issued from different departments. Information, about the total figure, is therefore not readily available.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, இதிலே போலீசாருடைய செலவைப் பெற வேண்டுமானால், அதிக காலதாமதமாகலாம். ஆனால், பிரதம மந்திரி அவர்களோடு சுற்றுப்பயணம் செய்த இதர அமைச்சர்கள், இன்னும் மத்திய சர்க்கார் சிப்பந்திகள் ஆகியோருடைய செலவுத் தொகையை உடனடியாகப் பெற்று, அதை அமைச்சர் அவர்கள் தெரிவிப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஸ்டேட் மினிஸ்டர்களுக்கு செலவு ஆயிற்று என்று சொல்ல முடியாது. அவர்கள் ஸ்பெஷல் டிரெயினில் ஏறிக் கொண்டு வந்து விட்டார்கள் அதனாலே, அதிக செலவு இருக்காது.

[9th December 1961

SRI A. GOVINDASAMY: பல இலாக்காக்கள் செலவு செய்த தாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். போலீஸ் இலாகாவுக்கு மட்டும் இதனாலே எவ்வளவு தொகை செலவாயிற்று என்று அறிவிக்கப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: விவரங்கள் இதுவரையும் வந்து சேரவில்லை. அதனாலே தான் கொடுக்க முடியவில்லை.

SRI A. A. RASHEED: Sir, is it not a fact that police protection was given to the Prime Minister because of the past experience arising from the activities of the political parties in the State?

THE HON. SRI C. SUBRAMANIAM: Yes, Sir. We are guided by the past experience also. But I am glad to mention that during recent years there has been a completely calm and peaceful atmosphere and I congratulate all the political parties on that.

SRI K. VINAYAKAM: Sir, however much the cost may be, is it not a fact that it is more than compensated by the advantage which we derived by the Prime Minister's tour in South India?

THE HON. SRI C. SUBRAMANIAM: It is a matter of opinion. The hon. Member, Sri K. Anbazhagan, may think otherwise. what the hon. Member may consider an advantage, he may consider it a disadvantage.

SRI A. GOVINDASAMY: அமைதியான நிலைமை ஏற்படுகின்ற நேரத்திலேகூட போலீஸ்காரர்கள் ஏன் கதர் உடையிலே சி.ஐ.டி.-க்களாக உலவ வேண்டும்?

THE HON. SRI C. SUBRAMANIAM: அந்தக் காரணத்தினாலே தான் அமைதி இருக்கிறதோ, என்னமோ.

*Small-scale Industries (North Arcot district)*

* 2204 Q.—SRI S. M. ANNAMALAI: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டத்தில் சிறு கைத்தொழில்கள் ஆரம்பிக்க சர்வே செய்தது எந்த நிலையில் உள்ளது?

(இ) என்னென்ன தொழில்கள் எந்தெந்த இடங்களில் ஆரம்பிக்கப்படும்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (அ) The Area Survey of the North Arcot District undertaken by the Economic Investigation Team of the Small Industries Service Institute, Madras has been completed and examined by the Government.

(இ) This Government have taken action to start a number of industries in the North Arcot district even before the survey was made. The particulars regarding the industries scheme implemented by the Government in the North Arcot District with places